உ

# திருமலைக் கோயில் வரலாறு.




திரிசிரபுரம் தமிழ் ஆசிரியர்

**திரு. R. பஞ்சநதம் பிள்ளை அவர்களால்**

எழுதப்பெற்று



பண்பொழி திருமலைக்குமாரசுவாமி தேவஸ்தானம்

நிர்வாகத் தலைவர்

**திரு. T. R. பெரியநாயகம் பிள்ளை,** B. A., L. T.,

தர்மகர்த்தர்கள்

**திரு. V. S. சுப்பையா பிள்ளை அவர்கள்**

**திரு. M. குட்டி மூப்பனார் அவர்கள்**

**திரு. I. S. சுப்பையாப் பிள்ளை அவர்கள்**

ஆகியவர்களால் வெளியிடப்பெற்றது.

ஸ்ரீ மீனாக்ஷி பிரஸ், தென்காசி.

**1951.**




[ விலை **3** அணா.

# இரண்டாவது பதிப்பின் முன்னுரை

உள்ளமாகிய கோயிலின்கண் எழுந்தருளியிருந்து உலவாத பேரின்ப வெள்ளம் பொழியும் பெருமானைப் புறத்தும் அகத்தும் நோக்கி வழிபடுதற்கு அமைந்த இடங்கள் பல. நீலக்கடலில் முளைத்தெழுகின்ற இளஞாயிறு இள முருகனாகவும், அந்தக் கோலக்கடல் கலாப மயிலாகவும் நக்கீரருக்குத் தோன்றியது. மாலைச் செவ்வானத்தில் மலையின்மேல் மெல்லென மறையத் தொடங்கும் மாலை ஞாயிறு நெடுமுருகனாகவும் அன்னாருக்குக் காட்சியளித்தது. இவ்விரண்டு காட்சிகளையுந் திருமலைமேல் நின்று காலையும் மாலையுங் காணவல்லார் குருவருள்பெற்றுத் தன்னகத்தே உறையும் முருகனின் ஒளிவடிவினை உள்ளுற நோக்கி உவகைத்தேன்பருகி உலப்பிலாப் பேரின்ப வெள்ளத்தில் திளைப்பர். இதற்குக் குருவின் அருளைப்பெறவும் அதற்குரிய அன்பினை வளர்க்கவும் வேண்டிய முறையில் புறத்தே வழிபடுங் கோயில்கள் பலவெனினும் அவற்றுளெல்லாஞ் சென்னியாகத் திகழுகின்ற திருமலை முருகன் கோயில் உடலில் உயர்ந்த உச்சியினைப்போன்று குடுமியுயர்ந்த குன்றாகத் திகழ்வது குன்றா நலம் குறைவறக் கொடுக்குமென்பதற்கு ஐயமே இல்லை. இந்தக்கோயிலை வழிபடவருந் தொண்டர் கூட்டங்கள் அருவி நீராடி அல்லலைப் போக்குவோமென்று வரவில்லை. போக்குவரவு வசதிகளின் குறைவையும் பொருட்படுத்தாது முருகன் வீற்றிருக்கும் மலையிலிருந்து வந்து பாய்ந்து வீழ்கின்ற அருள் வெள்ளத்தில் மூழ்க - அருள் அருவியில் நீராடவருகின்றார்கள். உள்ளங் கரைந்து கண்ணீரொழுக அழுது வழிபடுபவர் பலர். இத்தூய தொண்டர் கூட்டம் "நினைதொறுங் காண்டொறும் பேசுந்தொறும் எப்போதும் -

அனைத்தெலும்பும்'' உள்நெகிழ ஆனந்தத் தேன் சொரியப் பெற வழிகாட்டுங் குருவருளை இறைவன் அருள்வானாக. இத்தொண்டர் கூட்டத்திற்குத் திருமலையின் மேல் இயந்திர முறையில் நீர்ப்பெருக்கஞ்செய்து செயற்கை யருவி விழச் செய்து நீராடவும் வசதிசெய்து கொடுக்கவேண்டும், அதற்குத் திருவருள் வழி காட்டுவதாக. அதற்கிடையில் வேண்டிய தண்ணீர் வசதிகள் நீராடவும், பருகவும் உண வாக்கவும் இனியதாகத் திகழும்படி செய்து கொடுப்பதற்கு உரிய ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கின்றோம். மற்றும் பல வசதிகள் செய்வதற்கும் வேண்டும் ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. நிற்க, இப்பொழுது கோயிலினுள் ளும் புறமும் மின்சார விளக்குகள் ஒளிரும்படி செய்துள் ளோம். திருக்கோயிலின் வருவாயும் முன்பிலிருந்து ஐந்து மடங்காகப் பெருகியிருக்கின்றமையால் மக்களின் அன்புப் பெருக்கமும் இறைவன் அருட்பெருக்கமும் புலனாகின்றது. அவ்வாறு வருகின்ற மெய்யன்பர்கள் கோயிலின் வரலாறும் உணரப்பெறின் அது அவர் தம் அன்பினை மிகமுதிர்வித்துப் பெருநலங் கனியச் செய்யுமாதலின் இவ்விரண்டாம் பதிப் பினை இதுபோது வெளியிடுகின்றோம். இந்த அன்புத் தொண்டர் கூட்டம் உலகின்கண்ணுள்ள மக்களைச் சான் றோர்களாக்கும் என்பதில் ஐயமில்லை. எல்லாவற்றிற்கும் எம்பெருமான் அருள் இனிதே துணைசெய்வதாகுக.

தெருண்முயங்குஞ் சீர்மலைவாழ் நாயகனே! இன்ப
அருண்முயங்குஞ் சீர்தா அணைந்து.

பண்பொழி,
8—11—51.

**T. R. பெரியநாயகம் பிள்ளை,**
B. A., L. T.
நிர்வாக அதிகாரி.

# உள்ளுறை.

# திருமலைக் கோயில் வரலாறு.



## 1. கோயிலும், இருப்பிடமும்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு வகையாகப் பிரிக்கப்பட்ட இந்நிலவுலகத்தில் குறிஞ்சி என்பது மலையும் மலையைச் சேர்ந்த பகுதியாகும். குறிஞ்சிக்குரிய தெய்வம் குமரன் ஆவன். குமரன் எழுந்தருளிய கோயில்கள் பல. அவற்றுள் குன்றுதோறாடலாகிய குன்றுகள் யாவும் குமரனுக்குரிய கோயில்கள் ஆகும். புறத்தே உள்ள குன்றுகளில் உறையும் குமரன் மெய்யன்பர்களின் அகமாகிய குன்றிலும் அமர்ந்து அருள் செய்வான். "திணியான மனோசிலை மீதுனதாள் அணியார் அரவிந்தம் அரும்புமதோ" என்று அருணகிரியாரும் பாடியுள்ளார். எப்பொருளையுங் கடந்த இறைவன் உயிர்களுக்கு இன்பந் தந்து ஈடேற்றும் பொருட்டுத் தன் அருவத் தன்மையை நீக்கி உருவத்திருமேனி கொண்டு ஆங்காங்குள்ள கோயில்களில் குடிகொண்டு அடியார்களுக்கு அருள்செய்து வருகின்றான்.

தன்னேரில்லாத தமிழ் வழங்கும் தென்பாண்டிநாட்டில் திருநெல்வேலி ஜில்லா தென்காசி தாலூகாவில் திருக்குற்றால மலைச் சார்பில் செங்கோட்டைப் புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கில் சுமார் 5 மைல் தூரத்தில் திருமலை என்னும் ஒரு சிறு மலை உள்ளது. இது வட்டவடிவமான ஒரு சிறிய குன்று. இக்குன்றின் மீது குன்றுவிளக்கெனக் குகப்

பெருமான் கோயில்கொண்டிருக்கிருர். இது சிறு மலையாயினும் பெருமை பொருந்திய மலையே.

இம்மலை சுமார் 400 அடி உயரமிருக்கும். பாறையிலேயே வெட்டப்பட்ட சுமார் 544 படிகள் இருக்கின்றன. மலையின் சுற்றுப் பிரகாரம் சுமார் 1½ மைல் இருக்கும். செங்கோட்டைப் பண்புளி வழியாகவும் தென்காசி வழியாகவும் இவ்விடத்தை அடையலாம். தரிசிக்க வருவோர் தங்கியிருப்பதற்குரிய சத்திரங்களும் மலைமேல் உள்ளன.

## 2. கோயிலின் அமைப்பு.

இம்மலை மேற்குத் தொடர்ச்சி மலையை அடுத்துள்ளது. மலையைச் சுற்றிலும் பச்சைப் பசேலெனத் தோன்றும் மலைத் தொடர்களும், வயல்களும், வெளிகளும் ஆகிய இயற்கைக் காட்சிகள் கண்களுக்கு விருந்தளிக்கும். மலையின் மேல் வீசும் தூய காற்று உடலையும் உள்ளத்தையும் குளிர்விக்கும். மலையின் தென்புறமிருந்தே மலைமேல் ஏறவேண்டும். அடிவாரத்தில் வல்லபை கணபதி கோயில் உள்ளது. மலையின் இடைவழியில் நந்தகோபாலர் மண்டபம் உள்ளது. மலையேறுவோர் இவ்விடத்தில் தங்கிச் சிறிது இளைப்பாறுவர். இங்கே நடுவட்டப் பிள்ளையார் சந்நிதியும், இடும்பன் சந்நிதியும் உள்ளன. மேலே சென்ருல் மலையின் சுற்றுப்புறங்களிலுள்ள பல இடங்களைப் பறவைக் கண்போலப் பார்க்கலாம். மலையின்மேல் உச்சிப்பிள்ளையார் உறையும் சிறு கோயில் உள்ளது. இதற்குத் தனியே 16 படிகள் உண்டு. இவை 16 பேறுகளைக் குறிப்பனபோலும். பக்கத்தில் தேவஸ்தான விடுதி உள்ளது. அதனை அடுத்து ஒரு சுனை உள்ளது. அதன் மேல்புறம் சப்த கன்னிகைகளின் சிலைகள் உள்ளன. பக்கத்தில் பசுப்புரை என்னும் பசு மடம் உள்ளது. இதில்

சுமார் 20 பசுக்கள் உள்ளன. இவைகளின் பால் அபிஷேகத்துக்கு அனுப்பப்படுகிறது. மலையின் நடுவில் ஒரு புளிய மரம் தலவிருக்ஷமாய் அமைந்துள்ளது. அதன் அடியில் வேலும் மயிலும் கொண்ட கற்சிலை உள்ளது. அதில் 'உத்தண்ட வேலாயுதம்—ஆதிமூல நிலையம்' என்று பொறிக்கப்பட்டுள்ளது. இத்தலத்தின் ஆதி சந்நிதி இதுவே.

மலைமேல் உள்ள முருகன் கோயில் தெற்கு நோக்கியும் முருகன் சந்நிதி கிழக்கு நோக்கியும் உள்ளன. உள்ளே ஒரு பிரகாரமும், வெளியே ஒரு பிரகாரமும் உள்ளன. வாயிலை அடுத்து வசந்த மண்டபம் அழகாக அமைந்துள்ளது. இது 'சண்முக விலாசம்' எனப் பெயர் பெறும். நல்ல காற்றோட்டமும் நற்காட்சியும் பொருந்திய இடம். இதில் வசந்த விழா நடைபெறும். மற்றும் விசேட காலங்களில் சொற்பொழிவுகளும், இசைக் கச்சேரிகளும் நிகழும். இம்மண்டபச் சுவர்களில் முருகனைப்பற்றிய துதிப் பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. இவ்விடத்தில் தேவஸ்தானத்தைச் சேர்ந்த நூல் நிலையம் ஒன்றுண்டு. உட்பிரகாரத்தில் பல சந்நிதிகள் உள்ளன. மூல மூர்த்தியாகிய முருகனது திருவுருவம், கண்டவர் மனதைக் கவரும் தன்மையது. ஐந்து இந்திரியங்களும் கண் வழியே நின்று நிலவும். இவ்விக்கிரகம் கோட்டைத்திறடு என்ற இடத்திலிருந்து கொண்டுவரப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

## 3. மூர்த்திகளின் பெயர்கள்.

மலைமேல் வீற்றிருக்கும் மூல மூர்த்தியாகிய முருகப் பெருமானுக்குத் திருமலைக் குமாரசுவாமி என்று பெயர் வழங்குகின்றது. திருமலை ஆண்டவர், திருமலை ஆண்டி,

திருமலைவாழ் சோதி, திருமலை வடிவேலர், திருமலைக் குருபரன், திருமலைப் பெருமாள், திருமலை நாயகன், திருமலைக்குடுமி வித்தகன், திருமலை வேலன் முதலிய பெயர்களும் வழங்கும். உற்சவ மூர்த்திகள் முத்தையன், சண்முகன் என்றும் வழங்கப் பெறுவர். விநாயகர் அனுக்கைப் பிள்ளையார் என்று பெயர் பெறுவர்.

## 4. தீர்த்தங்கள்.

**1.** சரவணப் பொய்கை:— இது மலையின் அடிவாரத்தில் முன்னம் இருந்து வந்து தற்போது தூர்ந்து விட்டது.

**2.** இடும்பன் சுனை:— இது மலைப்படிகளின் இடையில் இடும்பன் சந்நிதிக்குப் பக்கத்தில் உள்ளது

**3.** பூஞ்சுனை:— இது திருக்குவளைச் சுனை என்றும் பெயர் பெறும். என்றும் வற்றாத, குளிர்ந்த, தூய நீரையுடையது. இதற்குள் 3 சிறு குழிகள் உண்டு. இவை இறைவனுக்குரிய சோம, சூரிய அக்கினியாகிய மூன்று கண்கள் எனச் சொல்லப்படுகின்றன.

முற்காலத்தில் இச்சுனையிலிருந்து பெருமான் திருவருளால் தினந்தோறும் ஒரு மலர் தோன்றியதாகவும், அதைப் பெருமான் திருமுடியில் சூட்டிவந்ததாகவும், அதனால் பூஞ்சுனை எனப் பெயர் ஏற்பட்டதாகவும் ஒரு வரலாறு கூறப்படுகிறது. இதில் எவரும் இறங்கிக் குளித்தல், கை கால் கழுவுதல் முதலியன செய்தல் கூடாது.

## 5. தலப் பெருமைகள்.

இத்தலம் இயற்கை அழகு நிறைந்த இடம். குளிர்ச்சி பொருந்திய குன்று. இந்திரியங்கள் ஒடுங்கி மன அமைதி

ஏற்படுவதற்கு ஏற்ற இடம். தமிழ் நாட்டின் மேற்கெல்லையாக விளங்கும் தலம். மலையிலிருந்து பார்க்குமிடமெல்லாம் பசுமை செறிந்த தோற்றங்கள். தீராத நோய்கள் தீரும் பதி. மலைமேல் மருந்தாக முருகன் விளங்குகின்றான். பிரார்த்தனைக்காரர்கள் சுவாமி சந்நிதியில் சில காலம் வந்து வேண்டுதல் செய்வார்கள். முதிர்ந்த பக்தர்கள் வெற்றிலையில் தம் நாக்கைத் துண்டித்து வைத்துப் பிரார்த்தனை செய்வதும், முருகன் திருவருளால் அவர்களுக்கு நாக்கு வளர்வதும், ஆகிய அற்புதங்கள் நிகழ்ந்தனவாகச் சொல்லப்படுகின்றது. கொட்டாக்குளத்துச் சுடலைமுத்துப் பிள்ளை குமாரர் சுப்பையா பிள்ளை என்பவர் ஓர் கொடிய நோயால் பீடிக்கப்பட்டு நோய் நீங்காமல் திருமலைப் பெருமான் சந்நிதியில் பலநாள் உபவாசமிருந்து தம் நாக்கைத் துண்டித்து வைத்துப் பெருமான் திருவருளால் நாக்கு மீண்டும் வளர்ந்ததுடன் நோய் நீங்கியதாகவும் சொல்லப்படுகிறது. இச் செய்தி 18–11–'39 தினமணிப் பத்திரிகையில் வெளிவந்துள்ளது. விபூதிப் பிரசாதம் பன்னீர் இலையில் வைத்து வழங்கப்படுகிறது. இதற்காகச் சொக்கம்பட்டி ஜமீன்தார் காலத்தில் மேல ஆவரந்தாப் புரவில் சுமார் 12 கோட்டை விரைப்பாடு நஞ்செய் நிலம் மானியமாக விடப்பட்டிருப்பதாய்த் தெரிய வருகிறது. இலை, விபூதியின் பெருமையைக் குறித்து ஓர் பாடல் உண்டு.

"இலபமில் குமரவேள் முன்வணங்கு வார்க்கென்றும்
இலையடு பகைசற்றேனு மிலைபடு பிணிநிரப்பும்
இலையளற் றுழன்றுவீழ்த வினைபல பவத்துச்சார்பும்
இலையென இலைவிபூதி எடுத்தெடுத் துதவல்கண்டார்".

—மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்கள்.

இப்பாடலின்படி குமரவேள் முன் இலை விபூதி பெறுவோர், பகை, பிணி, வறுமை, துன்பம் முதலியன நீங்கப்பெறுவர் என்பது புலனாகின்றது.

தினந்தோறும் எட்டுக் காலப் பூசைகள் நிகழ்கின்றன. பைரவமூர்த்திக்குத் தேன்வடை மாலை சாத்துதல் வழக்கம். இரவுப் பூசைக்குப் பின் கோயிலின் சாவியை இம்மூர்த்தியிடம் ஒப்புக்கொடுப்பது புராதனமாக நடந்துவருகிறது. இவ்விடத்தில் அகத்தியர் முதலிய முனிவர்கள் உபதேசம் பெற்றதாகச் சொல்லப்படுகிறது. 'திருமலை முருகன் பெருமை யநேகம்' என்றவாறு முருகனது பெருமைகள் முடிவில்லாதன.

## 6. வழிபட்டோர்.

அகத்திய முனிவர், சப்த கன்னிகைகள், அருணகிரிநாதர் முதலியோர் இத்தலத்துப் பெருமானை வழிபட்டுப் பேறு பெற்றுள்ளார்கள். சப்த கன்னிகைகள் வழிபட்டதற்கு அடையாளமாகப் பூஞ்சுனையின் மேல்புறத்தில் சப்த கன்னிகைகளின் சிலைகளைக் காணலாம்.

## 7. சுற்றுக் கோயில்கள்.

**1.** நகரீசுவரமுடையார் கோயில்.

செங்கோட்டைக்கு வடக்கே மூன்று மைல் தூரத்தில் பண்புளி என்னும் ஒரு சிற்றூர் உள்ளது. தற்போது பம்புளி என்று வழங்கப்படுகிறது. இது பண்பொழி, பண்பொளி, பண்பை, பண்பைநகர், பம்புளிப் பட்டணம், பண்புளிப் பட்டணம் எனப் பலவாறாகச் சொல்லப்படுகிறது. பசுமையான சோலையையுடையது என்னும் பொருளைக்கொண்ட "பைம்பொழில்" என்னும் பெயரே பற்பல பெயர்களாக மாறிப் பேசப்படுகிறது என அறிஞர் கூறுவர்.

இவ்வூரில் உள்ள தனிவிடுதியில் திருமலைத் தேவஸ்தான காரியாலயம் இருந்துவருகிறது.

இவ்விடத்தில் ஓர் அழகான சிறிய கோயில் உள்ளது. உள்ளே ஒரு பிரகாரமும், வெளியில் தேரோடும் வீதியும் உள்ளன. சுவாமி, அம்மன் சந்நிதிகள் கிழக்கு நோக்கியுள்ளன.

சுவாமி நகரீசுவரர் என்றும், அம்மன் அறம்வளர்த்த நாயகி (தர்மசம்வர்த்தினி) என்றும் வழங்கப் பெறுவர். கோயிலுக்குள் ஒரு கிணறும், ஒரு சுனையும் வெளியே ஒரு குளமும் தீர்த்தங்களாக உள்ளன. இக்கோயிலில் மாசி மாதத்தில் பத்து நாட்கள் வரை பெருவிழா நிகழும். ஒவ்வொரு மாதத்திலும் பிரதோஷம், திருவாதிரை, பௌர்ணமி முதலிய விசேஷ தினங்களில் பெருங்கூட்டத்தினர் வந்து வழிபடுவர். பண்புளியிலும் வடகரை மேல் பிடாகையிலும் நன்செய், புன்செய் நிலங்கள் உள்ளன. இக்கோயிலில் திருப்பணிகள் செய்யப்பட்டு ஆங்கீரச ஆண்டு தை மாதம் 22-ந்தேதி கும்பாபிஷேகம் நடைபெற்றது. இக்கோயிலில் சில கல் வெட்டுக்கள் உள்ளன.

## 2. திருமலைத் தேவஸ்தானத்தைச் சேர்ந்த பிற கோயில்கள்.

மலையடிவார விநாயகர் கோயில், இடை வழியில் உள்ள இடும்பன் கோயில், மலைமேல் வடபுறம் உள்ள காளி கோயில், வண்டாளும் பொட்டலிலுள்ள விலாசப்பிள்ளையார் கோயில், சிவகாமிப் பரதேசி ஒடுக்கம், கறுப்பன் கோயில், தாமரைக்குளம் மாடன் கோயில், அடவி நயினார் கோயில், செவ்வந்தி விநாயகர் கோயில், கற்பக விநாயகர் கோயில், நாபலி கொண்ட அம்மன் கோயில், பேர்க்கினியார் சாஸ்தா, சுந்தரராஜப் பெருமாள் கோயில் முதலியன.

## 8. திருப்பணிகள்.

### 1. புராதனத் திருப்பணிகள்.

வடகரை என்ற சொக்கம்பட்டி ஜமீனைச் சேர்ந்த முன்னோர்கள் திருமலையில் பல திருப்பணிகளைச் செய்ததாகத் தெரிய வருகிறது திருமலைக் கோயிலைச் சுற்றியுள்ள மண்டபங்களும், பூஞ்சுனைக்குப் பக்கத்தில் உள்ள மண்டபமும், சத்திரமும் கட்டுவித்தது, கோயிலுக்கு வேண்டிய திருவாபரணங்களும், பாத்திரங்களும் அளித்தது, பண்புளிப் பட்டணத்தில் பெருமானை எழுந்தருளச்செய்து மஹோற்சவம் செய்ய ஏற்பாடு செய்தது, பண்புளியில் ஒரு பங்களா கட்டுவித்தது, திருமலையில் சுக்கிரவாரமண்டபம் அமைத்துச் சுக்கிரவாரந்தோறும் ஏழைகளுக்கு அரிசி கொடுத்துவர ஏற்பாடு செய்தது, தினக் கட்டளைக்கு ஆயிரம் நெற்கோட்டை அளந்தது, திருத்தேர் அமைத்தது, பல கட்டளைகள் ஏற்படுத்தியது ஆகிய திருப்பணிகள் ஷை ஜமீன் குடும்பத்தாரால் செய்யப்பட்டனவாகத் தெரிகிறது.

### 2. பிற்காலத் திருப்பணிகள்.

1939-ம் ஆண்டில் திருப்பணி தொடங்கி மலைமேல் ஏறிச் செல்லும் படிகள் செப்பனிடப்பட்டன. சில படிகள் புதுப்பிக்கப்பட்டன. வழியில் இருபுறங்களிலும் இரும்புக் கம்பிகள் பொருத்தப் பெற்றன. மூலஸ்தானத்தில் மருந்து சாத்தியும், விமானத்தில் தங்க ஸ்தூபி அமைத்தும், பெருமானுக்கு வெள்ளிக் கவசங்கள் அமைத்தும், பிற கட்டிடத் திருப்பணிகளும் நிறைவேறி விக்கிரம ஆண்டு சித்திரைமீ 19-உ (1–5–'40) புதன்கிழமை கும்பாபிஷேகம் விமரிசை

யாக நடைபெற்றது. இத்திருப்பணிகள் தேவஸ்தான நிதியி லிருந்தும், பொது வசூலிலிருந்தும் செய்யப்பட்டன.

## 9. தினப் பூஜைகள்.

தினந்தோறும் உதயமார்த்தாண்டம், சிறு காலைசந்தி, காலை சந்தி, உச்சிக்காலம், மாலை ஆகிய ஐந்து காலங் களிலும் அபிஷேக அலங்கார ஆராதனைகளும், அர்த்த சாமம், ஏகாந்தம் ஆகிய இரண்டு காலங்களிலும் அபிஷேக மின்றி அலங்கார ஆராதனைகளும், காலையில் விஸ்வரூப தரிசன ஆராதனையும் ஆக எட்டுக்காலங்களில் பூசைகள் நடைபெற்று வருகின்றன. காலை, உச்சி, மாலை அர்த்தசாமம் ஆகிய பூஜா காலங்களில் திருப்புகழ்ப் பாராயணமும் திரு முறைப் பாராயணமும் ஓதுவார்களால் நடைபெறும்.

## 10. திருவிழாக்கள்.

ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் கந்தர் சஷ்டி விழாவும், கார்த்திகை மாதத்தில் தெப்பத் திருவிழாவும், தை மாதத்தில் பூச விழாவும், சித்திரை மாதத்தில் வசந்த விழாவும் வெவ்வேறு இடங்களில் நடைபெறும். விழாக் காலங்களில் உற்சவ மூர்த்திகள் அந்தந்த இடங்களுக்குச் சென்று இரவிலும், பகலிலும் பல வாகனங்களில் காட்சி தரும்.

கந்தர் சஷ்டி விழா 6 நாட்கள் வரையில் மலையிலும், 7, 8, 9-ம் நாட்களில் வண்டாளும் பொட்டலிலும் நிகழும். 7-ம் நாளில் பெருந் திருப் பாவாடையும், 8-ம் நாளில் சூர சம்மாரமும், 9-ம் நாளில் தேரோட்டமும் நிகழும். 10-ம் நாள் மலைமேல் தீர்த்தவாரி.

தெப்ப விழாவும், பூச விழாவும் பண்பை நகரில் நடைபெறும். கார்த்திகை மாதம் கடைசி சோமவாரத்தில் பண்புளியில் உள்ள தெப்பக்குளத்தில் தெப்பம் நடைபெறும். தெப்பம் 11 முறை சுற்றும். இரவில் சுவாமி மயில் வாகனத்தில் எழுந்தருளி வீதிவலம் வரும்.

பூச விழா தை மாதத்தில் பத்து நாட்கள் வரையில் பண்பை நகரில் நடைபெறும். முதல் நாள் கோயிலுக்கெதிரில் அன்னக்கொடி ஏற்றப்படும். 2 முதல் 6 நாள் வரையில் ஒவ்வொரு நாளும் மாலையில் நகரீசுவரமுடையார் கோயிலின் உட்பிரகாரத்தில் ஐந்து முறை பத்தி உலா நடைபெறும். முதல் சுற்றில் வேதபாராயணமும், இரண்டாவது சுற்றில் தேவாரத் திருமுறையும், மூன்றுவது சுற்றில் திருப்புகழ்ப் பாடலும், நான்காவது சுற்றில் சங்கீத வினிகையும், ஐந்தாவது சுற்றில் விசேட மேளக்கச்சேரியும் நடைபெறும். 7-ம் நாள் சண்முகமூர்த்தியும் சேர்ந்து வந்து மறுநாள் திரும்பும். 9-ம் நாளில் தேரும், 10-ம் நாளில் தீர்த்தவாரியும் நிகழும். கடைசி நாள் அன்று மாலையில் சுவாமி மயில் வாகனத்தில் எழுந்தருளி வீதிவலம் வரும். இரவில் மேனுவில் மலைக்குத் திரும்பும். இக்காட்சி பார்ப்போர் மனதைப் பரவசப்படுத்தும்.

வசந்த விழா சித்திரை மாதத்தில் மலை மேலுள்ள வசந்த மண்டபமாகிய சண்முக விலாசத்தில் நடைபெறும். அவ்விடத்தில் பெருமானுக்கு அபிஷேக அலங்கார தீபாராதனைகள் சிறப்பாய் நிகழும். திருவிழாக் காலங்களில் தேவாரம் திருப்புகழ்ப் பாராயணமும், சொற்பொழிவுகளும், இசைக் கச்சேரிகளும் ஆங்காங்கு நடைபெறும்.

இவையன்றி மாதந்தோறும் கடைசி சுக்கிரவாரத்திலும், கார்த்திகை நட்சத்திரத்திலும், வைகாசி விசாகத்திலும் விசேஷ அபிஷேக அலங்கார தீபாராதனைகள் நிகழும். சுக்கிரவாரங்களில் சுவாமி வெள்ளிச் சப்பரத்திலும், கார்த்திகையில் மயில் வாகனத்திலும் காட்சி கொடுக்கும். பக்தர்கள் பாற்பசு, ஆடு, சேவல் முதலியவைகளைக் காணிக்கையாகச் செலுத்துவார்கள்.

## 11. பழய வரலாறுகள்.

**1.** மூலமூர்த்தியின் வரலாறு.

முன் ஒரு காலத்தில் மலைமேல் உள்ள பூஞ்சுனைக்குப் பக்கத்திலுள்ள சப்தகன்னிமார்களைக் கோயில் அர்ச்சகர்கள் வழக்கம்போல் தினந்தோறும் பூஜித்து வருங்கால், ஒருநாள் தங்கள் பூசனைகளை முடித்துவிட்டுச் சுனையின் தென்புறமுள்ள ஆதிநிலையமாகிய புளியமரத்தின் அடியில் சிறிது நேரம் கண் அயர்ந்து இளைப்பாறினர். அப்போது முருகப்பிரான் கனவில் தோன்றி "இம்மலையின் வடசார்பில் அனுமான் நதிக்குப் பக்கத்திலுள்ள கோட்டைத்திரடு என்ற இடத்தில் மூங்கிற் காட்டுக்குப் பக்கத்தில் மண்ணால் மூடப்பட்டுச் சிலை வடிவமாயிருக்கிறோம். நீங்கள், நோயினால் வருந்திக்கொண்டிருக்கும் அரசனிடஞ் சென்று இச்செய்தியை அறிவித்து அரசனுடைய பரிவாரங்களுடன் மேற்குறித்த இடத்துக்குப் போய்க் கட்டெறும்பின் உதவியால் கண்டறிந்து மூடிக்கிடக்கும் சிலையை எடுத்து வந்து மலைமேல் பிரதிட்டை செய்தால் அரசனுக்குற்ற நோய் தீரும்" என்று அறிவித்து மறைந்தார்.

அர்ச்சகர்கள் திடீரென விழித்தெழுந்து ஆவேசத்துடன் அரசனிடஞ் சென்று தாங்கள் கண்ட கனவைச்

சொல்லவே, அரசனும் தன் பரிவாரங்களுடன் அனுப்பி வைத்தான் அவர்கள் கோட்டைத்திரடு என்ற இடத்திற்குப் புறப்பட்டு போய்க் கட்டெறும்பின் உதவியால் சிலையைக் கண்டுபிடித்து மலைக்குக் கொண்டுவந்து ஒரு மண்டபம் அமைத்து ஆகம முறைப்படிப் பிரதிட்டை செய்து அபிடேக ஆராதனைகளை நடத்தி வரலானார்கள். அரசனைப் பீடித்திருந்த பிணியும் விலகியது. அந்நாள் முதல் மூலமூர்த்தி திருமலை முருகனாக விளங்கி நின்று அடியார்களுக்கு அருள் செய்து வருகின்றார்.

## 2. சிவகாமிப் பரதேசியார் வரலாறு.

திருநெல்வேலி ஜில்லாவில் நெடுவேலி என்ற கிராமத்தில் கங்கை முத்துத் தேவரின் மனைவியாராகச் சிவகாமியம்மையார் என்பவர் ஒருவர் இருந்தார். இவர் மறவர்குல மாது; கற்பிற் சிறந்தவர்; பெண்ணிற் பெருந்தகையார்: முருகனிடம் அளவில்லாத பக்தி பூண்டவர்: துறவறம் மேற்கொண்ட தூய்மையார்; திருமலைக் கோயிலை உயர்நிலைக்குக் கொண்டுவந்த உத்தமியார். இவர் தம் ஊரிலிருந்து திருமலைக்கு வந்து முருகனைத் தரிசித்துச் செல்வது வழக்கம்.

சில ஆண்டுகளுக்குப் பிறகு கணவன் காலஞ்சென்றதாலும் தமக்குச் சந்ததி இல்லாததாலும் இவ்வம்மையார் தமக்குரிமையான சகல சொத்துக்களையும் திருமலைப் பெருமானுக்குப் பட்டாச்செய்து கொடுத்தார். அல்லாமல் வண்டாளும் பொட்டலில் ஓர் சத்திரம் கட்டுவித்து அவ்விடத்தில் தாமும் இருந்துகொண்டு வருகின்றவர்களுக்கு ஆகாரமும், நீர்மோர் முதலியனவும் கொடுத்து உதவுமாறு ஏற்பாடு செய்தார். ஷை கோயில் மலைக்கு வடபுறம் காடாக இருந்த இடத்தை ஷை அம்மையார் சீர்திருத்தம் செய்து புதிதாக

ஓர் குளம் வெட்டியும், நஞ்செய் நிலங்களை உண்டுபண்ணியும் விருத்தி செய்திருக்கிறார். ஷை இடத்திற்குத் தாமரைக் குளம் புரவு என்று பெயர்.

இவ்வாறு வாழ்ந்துவரும்போது அம்மையாரின் கனவில் முருகப்பெருமான் தோன்றி, "அம்மையே, நாளை நீ வண்டியில் புறப்பட்டுப் புளியரைக் கிராமத்திற்குச் சென்று மாடு நிற்கும் இடத்தைத் தோண்டிப் பரிசோதித்தால் வேலும் மயிலும் போட்ட கல்லும், ஒரு சாசனமும் கிடைக்கும். அவைகளை எடுத்து வேண்டுவன செய்வாயாக" என்று சொல்லி மறைந்தார்.

அம்மையார் அவ்வாறே சென்று ஆராய்ந்து பார்க்கக் கல்லும் சாசனமும் கிடைத்தது. சாசனத்தில் திருமலை முருகனுக்கு 150 கோட்டை விரைப்பாடும், தோப்பு, நிலம் முதலியனவும் விடப்பட்டிருந்ததாகக் கண்டிருந்தது. இந்தச் சொத்துக்கள் அப்போது ஒரு ராயரின் அனுபவத்திலிருந்து வந்தன. அவர் இந்த சொத்துக்களைக் கோயிலுக்குக் கொடுக்க மறுக்கவே அம்மையார் திருவாங்கூர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடுத்தார். நீதிபதி பல காரணங்களைச் சொல்லி அம்மையாருக்கு விரோதமாகத் தீர்ப்பளித்தார். பின்பு அம்மையார் தாம் திருமலைப் பெருமானின் அக்தார் என்று கூறி மதுரை ஐக்கோர்ட்டில் அப்பீல் வழக்குத் தொடுத்தார். நீதிபதி செவ்வையாய் ஆராய்ந்து மேற்படி புளியரைச் சொத்துக்களைத் திருமலைப் பெருமான் பக்கம் சேரும்படிக்கும் மத்தியகால வரும்படியும் கொடுக்கும் படிக்கும் தீர்ப்புச் செய்தார்.

அம்மையார் மேற்கண்ட சொத்துக்களின் வரும்படியைக்கொண்டு திருமலையில் பல திருப்பணிகளைச் செய்து

கோயிலை உயர்நிலைக்குக் கொண்டுவந்தார். இவ்வம்மையாரின் சமாதி வண்டாளும் பொட்டலில் "சிவகாமிப் பரதேசி ஒடுக்கம்" என வழங்குகிறது. இவருடைய கணவன் பெயரால் நெடுவேலிக்குப் பக்கத்தில் ஒரு பாலம் இருப்பதாகக் கூறுகின்றனர்.

(இவ்வரலாறுகள் தேவஸ்தானத்தார் கொடுத்த குறிப்புக்களின்படி எழுதப்பெற்றன).

## 12. கல்வெட்டுக்களும், சாசனங்களும்.

திருமலைக் கோயிலில் கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை. ஆனால் அதே தேவஸ்தானத்தைச் சேர்ந்த பண்பொழி நகரீசுவரமுடையார் கோயிலில் பத்துக் கல்வெட்டுக்களும், சுந்தரராஜப் பெருமாள் கோயிலில் ஒரு கல்வெட்டும் கிடைத்திருக்கின்றன. இக்கல்வெட்டுக்கள் பெரும்பாலும் பின் பாண்டியர்களுடைய காலத்தவை. அவைகள் 1917-ம் வருடத்தில் 657 எண் முதல் 667 வரை சர்க்காரால் நகல் எடுக்கப்பட்டிருக்கின்றன. அவைகளின் சுருக்கத்தை 1918ம் ஆண்டு அறிக்கையில் வெளியிட்டிருக்கின்றார்கள்.

மேற்படி கல்வெட்டுக்களில் சகம் 1425 முதல் 1496 வரையில் உள்ளவை நகரீசுவரர் ஆலயத்திலும், சகம் 1574-ஆண்டுக் கல்வெட்டு ஒன்று சுந்தரராஜப் பெருமாள் ஆலயத்திலும் இருக்கின்றன. ஆகவே இக்கல்வெட்டுக்கள் கி.பி. 15, 16-ம் நூற்றாண்டைச் சேர்ந்தவை எனலாம். அவைகளில் கண்ட முக்கிய விவரங்கள் பின்வருமாறு:—

1. சகம் 1425 (28–1–1504) ஜடாவர்மன் அழகன் பெருமாள் பராக்கிரம பாண்டியன் - அவிட்டத் திருநாள் - வடவாரி நாட்டில், பண்பொழில் என்னும் காங்கேயகுல

காலபுரத்தில் உள்ள நகுலீசுவரமுடையார் ஆலயத்திற்கும், நகரீசுவரமுடையார் ஆலயத்திற்கும் காணியாட்சி வேலைக்காக அலங்காரி என்பவனுச்கு நிலம் தானம் செய்தது.

2. சகம் 1466 - ( 1–2–1545 ) பழய முறையைத் தழுவிய ஜடாவர்மன் ஸ்ரீவல்லபதேவன் வடவாரி நாட்டுப் பண்பொழில் பட்டினத்து நகரீசுவரர் ஆலயத்தில் பூஜை செய்வதற்காக அசுவதி நட்சத்திரத்தில் பிறந்த திருநெல்வேலிப் பெருமாள் என்ற அரசகுமாரனுடைய உத்தரவின் படி நிலம் அளித்தது. நிலத்தின் உரிமையாளன் வார்சில்லாமல் இறந்துவிட்டான்.

3. 4. ௸ ௸

5. சகம் 1467 - ( 1546 ) ஜடாவர்மன் பெருமாள் பராக்கிரம பாண்டியன் அபிராம பராக்கிரம தேவனுடைய மகனும், அசுவதி நட்சத்திரத்தில் பிறந்தவனுமான திருநெல்வேலிப் பெருமாள் என்ற இளவரசன் கோயில் அத்தியயனத்திற்காக நிலம் அளித்தது.

6. (4–10–1545) - அதே அரசனுன ௸ திருநெல்வேலிப் பெருமாள், ஆலயத்தில் ஸ்ரீபலி கொடுப்பதற்கு நிலம் தானம் செய்தது.

7. சகம் 1469 (1548) ௸ திருநெல்வேலிப் பெருமாள் என்ற இளவரசன், கோயிற் கணக்கு எழுதுவதற்காகத் தென்காசியைச் சேர்ந்த ஒருவனுக்கு நிலம் தானம் செய்தது.

8. சகம் 1472 - அதே அரசன், ஒரு மடத்தின் கணக்கு எழுதுவதற்காக நிலம் தானம் செய்தது. இதில் நகுலீசுவரமுடையார், மூன்றுமுடிப் பிள்ளையார், திருவாலீசுவரமுடையார், எதிரிலாப் பெருமாள் என்ற ஆலயங்களின் பெயர்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன.

9. சகம் 1496 - (1-6-1579) ஜடாவர்மன் அழகன் பெருமாள் அதிவீரராமன் என்கிற ஸ்ரீ வல்லபதேவன் - தவணைக் கணக்கு எழுதினதற்காகப் பெருமாள் அபிராம சுந்தர வரதுங்கராமன் என்ற இளவரசன் திருநெல்வேலித் தொண்டைமான் என்பவனுக்கு நிலம் தானம் செய்தது.

10. சகம் 1474 - சுந்தரராஜப் பெருமாள் கோயில் கல்வெட்டில் இரண்டு பேர்கள் கோயிலுக்கு நிலம் தானம் செய்தது.

11. ஜடாவர்மன் வீரபாண்டியத் தேவன் - காங்கேய குலகாலபுரம் என்ற பைம்பொழிலில் இருந்த தண்டைக்கு நல்லான் - திருமலைச் செல்வன், தண்டைக்கு நல்லான் - கலியுக மெய்யன் என்ற இரு பேர்களுக்கும் நகரீசுவர முடையார் கோயிலில் உள்ள திரிபுவன சுந்தரமூர்த்தியின் படித்தரத்திற்காகத் தேவ தானமாக நிலம் கொடுத்தது.

மேல்கண்ட கல் வெட்டுக்களிலிருந்து நாம் அறியக் கூடியவை:— நாட்டின் பெயர் வடவாரிநாடு என்றும், ஊரின் பெயர் பைம்பொழில், பண்பொழில், பண்புளிப் பட்டினம் என்றும், இதற்கு அக்காலத்தில் காங்கேய குலகாலபுரம் என்றும் பெயர்கள் வழங்கி வந்தன. இவ்வூரில் நகரீசுவர முடையார் கோயிலும், நகுலீசுவரமுடையார் கோயிலும், மூன்றுமுடிப் பிள்ளையார் கோயிலும், திருவாகீசுவரமுடை யார் கோயிலும், எதிரிலாப் பெருமாள் கோயிலுமாகப் பல கோயில்கள் இருந்தன. நகரீசுவரமுடையார் கோயிலில் திரி புவன சுந்தரர் என்ற மூர்த்தியும் இருந்தது. திருமலைச் செல்வன், கலியுக மெய்யன் என்ற பெயர்களை மக்கள் இட்டு வந்ததனால் அக்காலத்திலேயே மலைக்குத் திருமலை என்ற பெயர் இருந்ததென்றும், அம்மலைமேல் கலியுக மெய்யனை

முருகக் கடவுள் எழுந்தருளியிருந்தாரென்றும் தெரியவரு கிறது. பாண்டிய அரசர்கள், மேல்கண்ட ஆலயங்களுக்குப் பூசை செய்தல், கணக்கெழுதுதல், ஸ்ரீபலி கொடுத்தல், அத்தியயனம் செய்தல் முதலியவைகளுக்காக நிலங்கள் தானம் செய்யப்பட்ட விவரமும் அறிகிறோம். அரசனே யன்றி அரச குமாரர்களும் இக் கைங்கரியத்தில் ஈடுபட் டிருந்தார்கள் என்று அறிகிறோம். பழய முறையை அனு சரிப்பதே ஒரு சிறப்பு என்ற கொள்கையை முன்னிட்டு அப் பெயரையே தமது பட்டமாகவும் பாண்டியர்கள் கொண் டார்கள் என்பதையும் அறிகிறோம்.

(இக்கல்வெட்டுச் செய்திகளையும் பிற சரித்திரக் குறிப் புக்களையும் கோவை கிழார் அவர்கள் அன்புடன் உதவி ஞர்கள்).

விஜயரெங்க முத்துவீர சொக்கநாத நாயக்கருக்காக (1706—32) அளகப்ப முதலியார் என்பவர் பண்பொழி திருமலைக் கோயிலின் பூஜைக்கும், திருவிழாவுக்கும் நிலங்கள் தானம் செய்த செப்புப் பட்டயத்தின் நகல்:—

"ஸ்வஸ்தி ஸ்ரீ பீகாவேம் தூகூாசயெ௲-ன் மேல் செல்லா நின்ற கொல்லம் ஸ்ரீ புலனேகவீர சந்திரகுல பிறத்திய மதுருமகேந்திர செந்தமங்கலா புரவலாதீசுவர ஜெயமங்கள நாறசிங்குளு தமோதிவாகர சோளசிந்துவடவாணல சங்கீத சாயுத்தியா வித்தியா விநோத சார்வ பூமதேவ பிருமண தாவணசாரிய கோர்சடிலவரமான ஸ்ரீ புவன சக்கிரவர்த்தி களின் கோனேமை கொண்டான் (கோன் நேர் இன்மை கொண்டான்) ஸ்ரீ அழகமழுமாள இறநாத காலமெடுத்த சீவல வரகுணாருமருன பாண்டிய குலசேகர தேவதீக்ஷதற்கு ஆண்டு ௱அ- ஆவது செல்லாநின்ற கொல்லம் ஆகூஎ-ம் ஞ

பிலவஸு பங்குனிமீ" ச-உ சுக்கிரவாரமும் கிருஷ்ண பச்சத்து துவாதேசியும், உத்திராட நச்சத்திரமும் சுபயோக சுபகரணமும் பெற்ற சுபதினத்தில் பாண்டாமண்டலம் தெக்ஷண தேசத்துக்கு கர்த்தரான விஜயரெங்க கிருஷ்ண முத்துவீர சொக்கனாத நாயக்கரய்யனவர்கள் காரியத்துக்குக் கர்த்தரான பிரதானி அய்யனவர்களுக்கு புண்ணியமாக அளகப்ப முதலியாரவர்களோம். சுவாமி திருமலைக் குமாரருக்கு சருவமானிபமாக உதையமார்த்தாண்டங் கட்டளை விட்டுக் குடுத்த நிலம் புளியரையில் தத்துவப்பிரகாச பண்டாரம் பயிரிட்டுவந்த கத்தியூர்திருத்து தன்னம்பி கரிசலுள்பட கார் விரை கோட்டை நடு பிசானம் தாமரைக்குளம் கோளி குண்டி புதுவல்திருத்து தடியுள்பட விரை கோட்டை நடுரு ஆக கார் பிசானம் விரை கூடுரு-ல் தத்துவபிரகாச பண்டாரம் வயலு கார்டனுவிரை ரு போக நீக்கி விரை கூட-ம் புளியரை ஆத்துக்கு தெற்கு, சாத்தா பண்டாரத்தெல்லைக்கு மேற்கு, கடை இஞ்சிபத்துக்கு வடக்கு, தன்னம்பிகாலுக்கும் கிழக்கு, இந்த நான்கெல்லைக்குள்பட்ட புஞ்சையும் மாவடையும் மறவடையும் ஆயத்துரைக்கு கீழக்குடியிருப்பு தைத்திருவிளாவுக்கும், கூளரு-ம்ளு தைமீ" உ0க-உ விட்டுகுடுத்து பண்பிரி ஊர்பரிசை கைத்தடிப்படிக்கு கார் விரை கோட்டை உ0-ல் ஷ்டி தாளடி விரை கோட்டை உ0-ம், பால்கஞ்சி கட்டளை சூகூளக-ம்ளு தைமீ" ரு-உ விட்டுக்குடுத்தது விரை க-ம் விசையதசமி தை திருவிழா மண்டப கட்டளைக்கு விட்டுக் குடுத்தது சுத்தடி ஊர்பத்து சிறுமடை மேடு கைத்தடிப் படிக்கு விரை உ-ம், சூரசங்கார மண்டப கட்டளைக்கு தீக்ஷதரய்யனவர்கள் மணியத்தில் விட்டுகுடுத்தது கைத்தடிப்படி ஊர்பத்தில் விரை நவம் விளாபூசை, காலசந்தி கட்டளைக்கு முன் ஆளஎ0க-ளு யுவஸு பங்குனிமீ" உ-உ வெங்கடாத்திரி நாயக்கரவர்கள் மணியத்தில் விட்டுக்கொடுத்தது சுத்தடி

கீழப்பலாரு முருகமங்கலம் ஊர் சுத்தடி விரை ௳க-ம், உச்சிக்காலக் கட்டளைக்கு மாயூரநாத பிள்ளையவர்கள் விட்டுக் குடுத்தது திருமலைக்கு வ ட க் கு தாமரைக்குளம் விரை ௳உ-ம் அாஎ௳அ-ளு சித்திரபானுஹு ஆவணிமீ ௳உ-உ திருவெங்கிடநாத முதலியார் மணியத்தில் திப்பணம்பட்டி ஊரார் விட்டுகுடுத்தது சங்கரமூர்த்திநாடான் குடியிருப்பும், சாணான் புதுக்குளம் நஞ்சையும் விரைப்படி அ-ம் ஷெடி நஞ்சை புஞ்சையும் சீவலநாடான் குடியிருப்பு அதினுடனே சொந்த புஞ்சையும் நெரிஞ்சி பரும்புக்காட்டு புஞ்சையும் இது முதலானதெல்லாம் சருவமானிபமாக தானம் செய்து குடுத்தபடியினாலே சந்திராதித்தர் உள்ளவரைக்கு அர்த்த ஆகாமியநிதி நிச்செபஜெலதருபாசனம்உள்ளதும், சயிதமாக அட்டபோத சுவாமியங்களுக்கு தானாதி விக்கிரயங்களுக்கு திருமலைக் குமாரசுவாமி கோவில் அனுபவித்துக்கொண்டு கோவில் பூசை நெய்வேத்தினம் முதலானதும் உதயமார்த்தாண்டம் கட்டளையும், பால்கஞ்சி கட்டளையும், தை திருவளாவும் மண்டகப்படிகளும் தாளவில்லாமல் நடத்திப் பிச்சுக்கொண்டு வருவீராகவும். இந்த தர்மங்களைப் பரிபாலனம் பண்ணின பேர் தெய்வப் பிரதிஷ்டை ப ண் ணி ன புண்ணியத்திலே அடைவாராகவும். இதற்கு அகிதம் பண்ணினபேர் மாதா பிதாவுக்கும் குருவுச்கும் அகிதம் பண்ணின தோசத்திலேயும், கெங்கைக் கரையிலே கோகத்தி பிரமகத்தி திரிகத்தி பண்ணின தோசத்திலேயும் போவாராகவும். இந்த தான சொத்தின்மேலெல்லாம் கையாடி கோவில்தலத்தாரில் பதுனாத சுப்பிரமணியபட்டரும் தானத்தாரில் விக்கிரபாண்டி ஈச்வர பட்டருமாக கட்டளை முதல் அர்த்தசாமம் வரைக்கும் சுவாமிக்கு அபிஷேக நெய்வேத்தினம் திருவிளாவும் தாளவில்லாமல் நடத்திவருவாராகவும்".

இப்படிக்கு அளகப்பா என்று எழுதியிருக்கிறது.

## 13. வருமானம் சொத்துக்கள் முதலியன.

ஆண்டுதோறும் சர்க்கார் மோகினித் தொகையும் சேர்த்து ரூ. 20,000 வருமானம் கிடைக்கிறது. சுமார் 20,000 ரூபாய் மதிப்புள்ள திருவாபரணங்கள் உள்ளன. சுமார் 10,000 ரூபாய் மதிப்புள்ள வெள்ளிப் பாத்திரங்கள் இருக்கின்றன.

பிரம்மோற்சவத்தில் பெருமான் வலம் வருவதற்காக வெள்ளிச் சப்பரமும், வெள்ளி மயில் வாகனங்களும், கலைமான், ஆட்டுக்கிடாய், சிங்கம், குதிரை, யானை, கைலாசம் முதலிய மரவாகனங்களும், தந்தப்பல்லக்கும், கோரதமும் இருக்கின்றன. இவைகளின் மதிப்பு சுமார் ரூ. 25,000.

சோத்துக்கள்:— இந்த ஜில்லாவில் பண்பொழி, வடகரை, கீழ்பிடாகை, மேல்பிடாகை, குத்துக்கல்வலசை, பெரிய பிள்ளைவலசை, கொடிக்குறிச்சி, நெடுவயல் கிராமங்களிலும், திருவாங்கூர் சமஸ்தானத்தைச் சேர்ந்த புளியரை, புதூர், செங்கோட்டை, ஆய்க்குடி, அச்சம்புதூர் கிராமங்களிலும் கோயிலுக்குரிய நஞ்செய், புஞ்சை நிலங்களும், தோப்புக்களும் இருக்கின்றன. புளியரையிலும் பண்புளியிலும் சுமார் 500 கோட்டை நெல் பிடிக்கும் நெற்களஞ்சியங்கள் உள்ளன. இவையன்றிப் பண்பொழியிலும் செங்கோட்டையிலும் கோயிலைச் சேர்ந்த சில வீடுகள் உள்ளன.

## 14. நிர்வாகம்.

ஆதியில் இக்கோயிலும் இதனையடுத்த பிற கோயில்களும் வடகரை என்னும் சொக்கம்பட்டி ஜமீனுக்குட்பட்டிருந்தனவாகத் தெரியவருகிறது. பிறகு ஜில்லா தேவஸ்தானக் கமிட்டியின் மேற்பார்வையில் தர்மகர்த்தர்கள் கண்காணித்து வந்தனர். 1938-ம் ஆண்டிலிருந்து சென்னை

இந்துமத தர்ம பரிபாலன பாதுகாப்புப் போர்டின் நிர்வாகத்திற்குட்பட்டு நிர்வாகத் தலைவர் (Executive Officer) ஒருவரின் மேற்பார்வையில் கோயில் காரியங்கள் நடைபெற்று வருகின்றன. மற்றொரு தர்மகர்த்தரும் உடனிருந்து கண்காணித்து வருகின்றனர்.

இவ்வரலாற்றைப் படிப்போர் யாவரும் இறுதியில் சேர்க்கப்பெற்றுள்ள துதிப் பாடல்களையும் பயின்று திருமலை முருகனின் திருவருளைப் பெறுக.

## 15. இலக்கியங்கள்.

(1) அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள்:—

1. ஒருபது மிருபது மறுபது முடனறும்
உணர்வுள இருபதம் உளநாடி
உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்
வெளியொடு மொளிபெற விரவாதே
தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து
திரிதொழி லவமது புரியாதே
திருமகள் மருவிய திரள்புய அறுமுக
தெரிசனை பெறவருள் புரிவாயே
பரிவுட னழகிய பழமொடு கடலைகள்
பயறொடு சிலவகை பணியாரம்
பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி
எழுதிய கணபதி இளையோனே
பெருமலை உருவிட உனதடி பணிகுவர்
பிணிகெட அருள்புரி குமரேசா
பிடியொடு களிறுகள் நடைபயில் கலைதிரள்
பிணையமர் திருமலைப் பெருமாளே.

2. வனச மொத்தபத குருநாதா
மலைமடப் பிடியுத் தமிபாலா

அனக தத்துவமெய்ப் பொருளோனே
அடிய னுக்குன து கழல்தாராய்
எனதுயிர்க் குயிரொத் தவநீதா
இபமுக பரமற் கிளையோனே
தினவனத் தெரிவைக் குரியோனே
திருமலைக் குமரப் பெருமாளே.

(2) திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்:— இது செங்கோட்டை கவிராஜ பண்டாரத்தையா என்பவரால் இயற்றப் பெற்றது.

1. கொந்து கமழ்ந்திடு குஞ்சியு மூவிரு
குலமணி மௌலிகளுங்
கோக நகங்களோ ராறு மலர்ந்தன
குளிருந் திருமுகமுஞ்
சந்த மணங்கமழ் கந்தர முங்கிரி
தண்டிய திண்புயமுந்
தனியயி லுங்கர தலமு மிலங்கிய
சந்துற நடமார்புந்
தொந்தி தருஞ்சிறு பண்டியு மேலணி
சுந்தர வரைஞாணுந்
துகிலும் பரிபுர பதமுங் கொடுதுயர்
துலையும் படியடியார்
சிந்தையி னின்று நடம்புரி யுங்குக
செங்கோ செங்கீரை
திருமலை யறுமுக சரவண பவகுக
செங்கோ செங்கீரை.

2. நாரி யொருத்திக் கிடப்பாக
நல்கும் பெருமா னுதல்விழியி
னண்ணும் பொறியைப் பவன னங்கி
நடுங்கிச் சுமந்து கங்கையென்னும்

வேரிப் புனலிற் புகுத்தவவள்
வெம்பிப் பயந்து சரவணத்தின்
மீதி விடமூ விருகுழவி
விரைந்து பிறந்தங் கழுதுவிம்மி
மூரி நெருப்பி னுடன்மடவார்
முலையுண் டுறங்கி யெழுந்திருந்து
முளரிப் பூவிற் றவழ்ந்திடவை
முகத்தோ னுடன்வந் துமைகரத்தால்
வாரி யணைக்கத் திரண்டதிரு
வடிவத் தொருவன் வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக் குழவி வருகவே.

3. அழிந்து புவன மொழிந்திடினு
மழியாத் தோணி புரத்தின்மறை
யவர்கள் குலத்தி னுதித்தரனோ
டம்மை தோன்றி யளித்தவள்ளச்
செழுந்தண் முலைப்பால் குடித்துமுத்தின்
சிவிகை யேறி மதுரையிற்போய்ச்
செழியன் பிணியுஞ் சமண்பகையுந்
தேவி துயருந் தீர்த்தருளி
வழிந்து நறுந்தே னுகுவனபோன்
மதுரங் கனிந்து கடைதுடிக்க
வடித்துத் தெளிந்த செந்தமிழ்த்தே
வாரப் பாடல் சிவன்கேட்க
மொழிந்து சிவந்த கனிவாய்ச்சண்
முகனே முத்தந் தருகவே
முத்துக் குமரா திருமலையின்
முருகா முத்தந் தருகவே.

(3) திருமலை ஆண்டவர் குறவஞ்சி:– இதனை இயற்றிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

1 சந்திதோறுஞ் சிந்தமுத்த மீந்தெனக்கால் வீசும்
சாதிகிளை மீதுகிளி வேதமுறை பேசும்
மந்திகனி கொண்டுமத தந்தியின்மேற் சாடும்
வானுலகின் பூவெடுத்துக் கானவர்கள் சூடும்
அந்திதொறு மைந்துவகைத் துந்துபிகண் முழங்கும்
ஆற்றொளிதென் காற்றொளிவான் மேற்றிசையைப்பி
செந்தமிழ்மா முனிமகிழ்ந்து சந்ததமும்போற்றும் [ளக்கும்
செங்குவளைத் திருமலைத னெங்கள் மலையம்மே.

2. அனுராகவல்லி மகமேரு வில்லி
அருள்தரு புதல்வ னருமறை முதல்வன்
முனமெதிர்சூரன் முனையடு வீரன்
மும்மதத்தும்பி முகன்றுணைத் தம்பி
சனகாதி வேதன் துதிஞான போதன்
அருட்குணசீலன் முனிக்கனுகூலன்
தினைவனவாசம் வளர்வள்ளி நேசன்
திருமலைமுருகன் பெருமையநேகம்.

(4) திருமலை நொண்டி நாடகம்:— இது திருமலை முருகன் பேரில் மன்னர் பெருமாள் புலவர் பாடியது.

... ... ... ... ... ...
குரவணி புயப்பெருமாள்—அழகிய
குகப்பெருமா ளறு முகப்பெருமாள்
சரவண பவப் பெருமாள்—மூவிரு
தலைப்பெரு மாள்திரு மலைப்பெருமாள்
ஆனைக் கிளைய பெருமாள்—திருமலை
யருட்பெரு மாள்நல்ல தெருட்பெருமாள்
சேனைத் தலைவர் பெருமாள்—உமையொடு
சிவப்பெருமாள் செய்தவப்பெருமாள்
காவிக் கிரியிற் பெருமாள்—பன்னிரு
கரப்பெரு மாள்குரு பரப்பெருமாள்

தூவித்து ரங்கப் பெருமா—ளருள்பெறு
சுரர்பெரு மாள்முனி வரர்பெருமாள்
பேசிய தமிழ்ப் பெருமாள்—ஒரு
பிடிப்பெரு மாள்குறக் கொடிப்பெருமாள்
தேசிகக் குருப்பெருமாள்—திருமலைத்
தெய்வப் பெருமாளெங்கள் சைவப்பெருமாள்.........

(5) திருமலைக் கறுப்பன் காதல்:— இதன் ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

செச்சைப் புயத்தழகன் செவ்வே டிருமலையி
லுச்சிக் கணபதியே உன்சதங்கைத் தாள்பணிவாம்.

பண்கொடுக்குஞ் செந்தமிழும் பாக்கியமு நல்கியருட்
கண்கொடுக்கு மெங்கள்தெய்வக் கந்தன் சரண்பணிவாம்.

செறிவானந் தப்பொருளைச் சிந்தையுள்ளே காட்டும்
அறிவானந் தக்குருவி னம்பொற் சரண்பணிவாம்.

தகரேறு வள்ளலெங்கள் சண்முகனை யீன்ற
நகரீசர் செய்ய நளினமலர்த் தாள்பணிவாம்.

திறம்வளர்த்த மூவர் துதி செய்யவுல குய்யவெண்ணுன்
கறம்வளர்த்த கன்னியெமை யாண்டவளைப் போற்றிசெய்வாம்.

பூவிலிருந் தருளும்பொற் கொடிதன் னற்புதல்வ
னுவிலிருந்த வெள்ளை நாயகியைப் போற்றிசெய்வாம்.

தரையி லதிசயஞ்சேர் தண்சுனையின்மேய
கரையிற் குடியிருக்குங் கன்னிமா ரைப்பணிவாம்.

கருமலையைப் போன்ற கனதனத்தாள் தெய்வத்
திருமலையிற் காளியம்மை சேவடியைப் போற்றிசெய்வாம்.

செங்காவி வாவித் திருமலையைக் காத்துநிற்கு
மெங்கோ னிடும்ப னிணைச்சரணம் போற்றிசெய்வாம்.

பணிகொண்ட சென்னிப் பரமனரி யீன்ற
மணிகண்டன் சாத்தா மலர்த்தாளைப் போற்றிசெய்வாம்.

சால இசக்கி தமிழ்வாணர் கொண்டாடும்
கால இசக்கி தண்டைக்காலைப் பணிந்திடுவாம்.

சீரியங்குஞ் செஞ்சொற் செந்தமிழைக் கொள்ளைகொண்ட
ஆரியங்கா வைய னடிக்கமலம் போற்றிசெய்வாம்.

படைக்கலங்கொண் டொன்னார் படைபொருது விண்ணோர்க்
கடைக்கலங் காத்தருளு மையன் சரண்பணிவாம்.

(6) திருமலைப் பள்ளு:— திருமலை முருகன் பேரில் பெரியவன் கவிராயர் இயற்றியது இந்நூல் அச்சாகவில்லை. பின்கண்ட இரு செய்யுட்களையும் முக்கூடற் பள்ளுப்பதிப் பாசிரியர் திரு. மு. அருணாசலம் பிள்ளை M. A., அவர்கள் அன்புடன் உதவினார்கள்.

கைக்கு வளைக்குலங் காணாள் அரைக்குக் கலைமறந்தாள்
இக்கு வளைக்கு மொருவனுக் கேங்கின ளென்றருளச்
சிக்கு வளைக்குடம் பற்றியுண்டான் மெய்த் திருமருகன் [மே.
மைக்கு வளைக்குன் றுடையான்முன் போய்ச்சொலும் வண்டினை

சைவ சிகாமணி கந்த சுவாமிபொற் றாளெனக்குக்
கைவச மாகத் தருஞ்சே வகன்குந்தி காதலராம்
ஐவர் சகாயன் மருகன் திருமலை யாறுமுகத்
தெய்வ சகாயமுண் டேவரு மோகொடுந் தீவினையே.

இவைகளையன்றித் திருமலை சம்பந்தமாய்த் திருமலைக் கலம்பகம், திருமலை அந்தாதி, திருமலை வெண்பா, திருமலை ஆனந்தக்களிப்பு என்ற நூல்களும் இருந்தனவாகத் தெரிகிறது. அவைகளைப்பற்றிய விவரங்கள் கிடைக்கவில்லை,

ஸ்ரீ முருகதாசக் கவிராயர் என்னும் சிவராமலிங்கம் பிள்ளையவர்கள் திருமலைத் தலபுராணம், திருமலைக்குமரன் அந்தாதி, திருமலைக்குமரன் திருப்புகழ், திருமலைக்குமரன் பதிகம், திருமலைக்குமரன் வண்ணம், திருமலைக்குமரன் சிங்காரச் சிந்து, முதலிய நூல்களைச் சமீபத்தில் இயற்றி யிருக்கின்றனர். நகரம் சங்கரபாண்டியம் பிள்ளை என்பவர் 1008 பாடல்களைக் கொண்ட 'திருமலைக் குமார சுவாமி திருப்புகழ்' என்ற நூலை இயற்றியுள்ளார்.

குருவிக்குளம் வெள்ளைச்சாமிப் பாவலர் "திருமலைக் குமரன் அருட்பா" என்ற நூலை இயற்றியுள்ளார் மற்றும் தென்காசி வன்னியப்ப பிள்ளை திருத்தாலாட்டு, திருக் குவளைமாலை முதலிய பிரபந்தங்களையும் இயற்றியுள்ளார்.

ஆறிரு தடந்தோள் வாழ்க அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீர் அடியார் எல்லாம்.



